2nd March 1961]

**Sri V. SUBBIAH :** *ப்ரகாசம் அரசாங்க காலத்தில் சோள உற்பத்திக்கு ஏக்கருக்கு பதினைந்து ரூபாய் உற்பத்தியாளர் களுக்குக் கொடுக்கப்பட்டது. ஏனென்றால் அதன் உற்பத்திச் செலவு ஏக்கர் ஒன்றுக்கு 150 ரூபாயாகிறது. ஆகவே அதைக் குறைந்த விலையில் உற்பத்தி செய்வதற்கு ப்ரகாசம் அரசாங்க காலத்தில் கொடுத்தது போன்று இந்த அரசாங்கம் கொடுக்க ஏதாகிலும் உத்தேசம் உண்டா என்பதை அறிய விரும்புகிறேன்.*

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** *நான் முன்பு அறிவித்தது போன்று இப்பொழுதுள்ள நிலைமையில் அரசாங்கம் அவ்வப்போதுள்ள விலைவாசியை பரிசீலனை செய்து வருகிறது. ஆகவே இப்பொழுதுள்ள நிலைமையில் அரசாங்கம் எந்த விதமான நடவடிக்கையும் எடுத்துக்கொள்வதாக இல்லை.*

**Sri S. RAMASAMI NAIDU :** *விவசாயப் பொருள்கள் விலை இப்பொழுது குறைந்து இருக்கிறது என்பது அல்ல என்ற பிரச்னை தனியாக இருக்கிறது. அந்த நிலைமையில் இன்றைக்கு இருக்கக் கூடிய நிலையில் இப்பொழுது விற்கக்கூடிய விலையானது அவர் களுடைய கூலி செலவு முதலியவைகளுக்குக் கட்டுபடியாகவில்லை என்பதை சர்க்கார் பரிசீலனை செய்யுமா ?*

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** *முன்பு இருந்த விலைக்கு இப்பொழுது குறைந்திருக்கிறது என்பது வாஸ்தவம் தான். ஆனால் இப்பொழுது விற்கக்கூடிய விலையானது விவசாயி களுக்குக் கட்டுபடியாகக்கூடியதாக இல்லை என்று சொல்வதை என்னால் ஒப்புக்கொள்ள முடியாது.*

*Prohibition*

***510 *Q.*—Sri N. R. THIAGARAJAN :** *கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—*

*1960-ல் சென்னை சினிமா ஸ்டுடியோக்களில் இதுவரை எத்தனை தடவை மதுவிலக்கு சோதனை நடந்தன ?*

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** No raids were conducted in the Cinema Studios in Madras City in 1960.

*Soil conservation*

***511 *Q.*—Sri A. VEDARATHNAM :** *கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) இம் மாநிலத்தில் மண் வளத்தைப் பாதுகாக்க அரசாங்கம் ஏதாவது புதிய திட்டம் வகுத்திருக்கிறதா ? அப்படியானால் அதன் விவரமென்ன ?*

*(இ) இதன் மூலம் அரசாங்கம் செய்ய உத்தேசித்துள்ள உதவி என்ன ?*

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** and (*b*) A statement [a] is placed in the table of the House.

[a] Printed as Appendix I on pages 84–85 infra.